‘ரசவாதி’ நூலாசிரியரிடமிருந்து மற்றொரு வெற்றிப் படைப்பு!

# பாலோ கொயலோ

# வில்லாளன்



Tamil translation of Paulo Coelho's *The Archer*

பாலோ கொயலோ

# வில்லாளன்

ஓவியங்கள்: கிறிஸ்டாஃப் நீமன்
ஆங்கில மொழிபெயர்ப்பு: மார்கரெட் ஜுல் கோஸ்டா

தமிழ் மொழியாக்கம்: நாகலட்சுமி சண்முகம்

MANJUL
மஞ்சுள் பப்ளிஷிங் ஹவுஸ்

ஒரு நாள் காலையில், செயின்ட் மார்ட்டின் தீவில்
நான் ‘கியூடோ’ பயிற்சியில் ஈடுபட்டிருந்ததைக்
கண்டுவிட்டு இந்தப் புத்தகத்திற்கான யோசனையை
எனக்குக் கொடுத்த லியோனார்டோ ஒயிட்டீசிகாவுக்கு
இந்நூலை நான் காணிக்கையாக்குகிறேன்

ஓ மரியாவே! பாவமின்றிக் கருத்தரித்தவரே, உம்மை நாடி வரும் எங்களுக்காகப் பிரார்த்தனை செய்வீராக! ஆமென்.

ஒரு செயல்பாடு இல்லாத ஒரு பிரார்த்தனை
ஒரு நாண் இல்லாத ஓர் அம்பைப் போன்றது;
ஒரு பிரார்த்தனை இல்லாத ஒரு செயல்பாடு
ஓர் அம்பு இல்லாத ஒரு நாணைப் போன்றது.

**- எல்லா வீலர் வில்காக்ஸ்**

# உள்ளடக்கம்

"தெட்சுயா."

இதைக் கேட்டு அச்சிறுவன் திடுக்கிட்டு அந்த அந்நியனைப் பார்த்தான்.

"தெட்சுயா தன் கையில் ஒரு வில்லைப் பிடித்து இந்நகரத்தில் யாரும் ஒருபோதும் பார்த்ததில்லை. அவரை ஒரு தச்சராகத்தான் இங்கு எல்லோருக்கும் தெரியும்," என்று அச்சிறுவன் பதிலளித்தான்.

"ஒருவேளை அவர் தன் வில்வித்தையைக் கைவிட்டிருக்கலாம், அல்லது அவர் தன் துணிச்சலை இழந்திருக்கலாம். அது எதுவும் எனக்கு ஒரு பொருட்டல்ல. ஆனால், அவர் தன் கலையைக் கைவிட்டிருந்தால், இந்நாட்டின் தலைசிறந்த வில்லாளன் அவர்தான் என்று அவர் கருதப்படக்கூடாது," என்று வலியுறுத்திய அந்த அந்நியன், "அதனால்தான், அவருக்கு சவால்விடுவதற்காக நான் பல நாட்களாகப் பயணம் செய்து இங்கே வந்திருக்கிறேன். எந்தப் புகழுக்கு அவர் இனியும் தகுதியானவர் இல்லையோ, அந்தப் புகழுக்கு ஒரு முடிவு கட்டுவதற்காகவே நான் இங்கு வந்திருக்கிறேன்," என்று கூறினான்.

அவனோடு விவாதிப்பதில் எந்த அர்த்தமும் இல்லை என்பதை உணர்ந்து கொண்ட அச்சிறுவன், "இந்த அந்நியரை நேராக அந்தத் தச்சுப் பட்டறைக்கு அழைத்துச் செல்வதுதான் சிறந்ததாக இருக்கும். அவரே தன் சொந்தக் கண்களால் பார்த்துத் தன் தவறை உணர்ந்து கொள்ளட்டும்," என்று நினைத்தான்.

தெட்சுயா தன் வீட்டின் பின்புறத்தில் இருந்த பட்டறையில் வேலை செய்து கொண்டிருந்தார். தன்னைப் பார்க்க வந்திருந்த நபர் யார் என்று தெரிந்து கொள்வதற்காக ஒரு புன்முறுவலோடு அவர் திரும்பியபோது, அந்த அந்நியன் சுமந்து கொண்டிருந்த நீளமான பையின்மீது அவருடைய பார்வை நிலைத்தது. உடனடியாக அவருடைய புன்னகை அவருடைய உதடுகளிலிருந்து விடைபெற்றுக் கொண்டது.

அந்த அந்நியன் அவரைப் பார்த்து, "உங்களுடைய நினைப்பு சரிதான். ஒரு மாபெரும் கதாநாயகனாக ஆகியுள்ள ஒருவரை அவமானப்படுத்தவோ அல்லது அவரை வம்புச் சண்டைக்கு இழுக்கவோ நான் இங்கு வரவில்லை. பல ஆண்டுகாலப் பயிற்சிக்குப் பிறகு நான் கச்சிதத்தை அடைந்துள்ளேன் என்பதை உங்களிடம் நிரூபிப்பது மட்டுமே என் விருப்பம்," என்று கூறினான்.

தெட்சுயா தன் வேலையைத் தொடர்ந்தார். அவர் ஒரு மேசையின் கால்களைப் பொருத்திக் கொண்டிருந்தார்.

“ஓர் ஒட்டுமொத்தத் தலைமுறைக்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்த ஒருவர் உங்களைப்போல இப்படி மாயமாய் மறைந்துவிட முடியாது. நான் உங்களுடைய போதனைகளைப் பின்பற்றினேன். வில்லின் மார்க்கத்தை நான் மதித்தேன். நான் அம்பு எய்வதை நீங்கள் பார்ப்பதற்கு நான் தகுதியானவன்தான். இதை மட்டும் நீங்கள் செய்துவிட்டால், நான் வந்த வழியே திரும்பிப் போய்விடுவேன். ஆசான்களுக்கெல்லாம் ஆசானான நீங்கள் இங்கு இருப்பதை நான் யாரிடமும் ஒருபோதும் வெளிப்படுத்த மாட்டேன்,” என்று அந்த அந்நியன் கூறினான்.

பிறகு அவன் தன் பையிலிருந்து ஒரு நீளமான வில்லை வெளியே எடுத்தான். வார்னிஷ் போடப்பட்ட மூங்கிலால் செய்யப்பட்ட வில் அது. அதை அவன் அதன் மையப் பகுதிக்குச் சற்றுக் கீழே பிடித்திருந்தான். அந்த அந்நியன் தெட்சுயாவைப் பணிந்து வணங்கிவிட்டு, தோட்டத்திற்குச் சென்று, ஒரு குறிப்பிட்ட இடத்தை நோக்கி மீண்டும் பணிந்து வணங்கினான். பிறகு, கழுகின் இறகுகள் பொருத்தப்பட்ட ஓர் அம்பை அவன் வெளியே எடுத்து, தன்னுடைய பாதங்களை நிலத்தின்மீது உறுதியாகப் பதித்துக் கொண்டு, ஒரு கையால் தன் வில்லைத் தன் முகத்திற்கு முன்னால் கொண்டு வந்து, மற்றொரு கையால் அந்த அம்பை அந்த வில்லில் பொருத்தினான்.

அவனைத் தெட்சுயாவிடம் அழைத்து வந்திருந்த சிறுவன் இக்காட்சியை மகிழ்ச்சியோடும் வியப்போடும் பார்த்துக் கொண்டிருந்தான். தெட்சுயா தன் வேலையை நிறுத்திவிட்டு, அந்த அந்நியனை ஒரு லேசான ஆர்வக் குறுகுறுப்புடன் கவனித்துக் கொண்டிருந்தார்.

அவன் அந்த அம்பை நாணில் தொடுத்து, தன்னுடைய வில்லை லேசாக உயர்த்தித் தன் மார்பின் நடுப் பகுதிக்கு நேராகப் பிடித்தான். பிறகு அவன் அதைத் தன் தலைக்கு மேலே உயர்த்தி, மெதுவாகத் தன் கைகளைக் கீழே கொண்டு வந்தபடி தன் வில்லின் நாணைப் பின்னுக்கு இழுத்தான்.

இப்போது அவனுடைய அம்பு அவனுடைய முகத்தையொட்டி அதற்கு இணையான நிலையில் இருந்தது. வில்லின் நாண் முழுமையாகப் பின்னுக்கு இழுக்கப்பட்டிருந்தது. அந்த வில்லாளன் சிறிதும் அசையாமல் நின்றான், அவனுடைய வில்லும் அசையாமல் உறுதியாக நிலை

கொண்டிருந்தது. நேரம் அப்படியே உறைந்துவிட்டிருந்ததுபோலத் தோன்றியது. அம்பு எந்த இடத்தைக் குறி பார்த்துக் கொண்டிருந்ததோ அந்த இடத்தை அச்சிறுவன் பார்த்துக் கொண்டிருந்தான், ஆனால் அவனால் அங்கு எதையும் காண முடியவில்லை.

திடீரென்று, அந்த அந்நியன் தன் நாணை விடுவித்தான். நாணைப் பிடித்திருந்த கை பின்னால் சென்றது. மறு கையிலிருந்த வில் அழகாக வளைந்தது. வில்லிலிருந்து விடுபட்ட அம்பு மாயமாய் மறைந்து, பிறகு தொலைவில் மீண்டும் தோன்றியது.

“போய் அதை எடுத்து வா,” என்று தெட்சுயா அச்சிறுவனைப் பார்த்துக் கூறினார்.

அவன் போய் அந்த அம்பை எடுத்து வந்தான். அந்த அம்பு ஒரு செர்ரிப் பழத்தைத் துளைத்திருந்தது. நாற்பது மீட்டர் தள்ளி நிலத்தின்மீது அவன் அதைக் கண்டெடுத்திருந்தான்.

தெட்சுயா அந்த வில்லாளனை நோக்கிக் குனிந்து வணங்கிவிட்டு, தன்னுடைய பணிமனையின் ஒரு மூலைக்குச் சென்று, மெல்லிய மரக்கட்டையைப்போல இருந்த ஒன்றை எடுத்தார். அது நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டிருந்தது. அது நீளமான தோல் சுருளால் சுருட்டிக் கட்டப்பட்டிருந்தது. அவர் அந்தத் தோலை மெதுவாக அவிழ்த்தார். அந்த அந்நியன் கொண்டு வந்திருந்ததைப் போன்ற ஒரு வில் அதற்குள்ளிருந்து வெளிப்பட்டது. ஆனால் அது அதிகமாகப் பயன்படுத்தப்பட்டிருந்ததைப்போலக் காட்சியளித்தது.

“என்னிடம் அம்பு எதுவும் இல்லை. எனவே, நான் உன்னுடைய அம்புகளில் ஒன்றைப் பயன்படுத்த வேண்டியிருக்கும். நீ கேட்டதை நான் செய்கிறேன். ஆனால் நீ கொடுத்த வாக்கை நீ காப்பாற்ற வேண்டும். நான் வாழ்கின்ற இந்த கிராமத்தின் பெயரை நீ எவரிடமும் வெளிப்படுத்தக்கூடாது. யாராவது உன்னிடம் என்னைப் பற்றிக் கேட்டால், நீ உலகின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்று தேடியும் என்னைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்றும், ஒரு பாம்பு கடித்து இரண்டு நாட்களுக்குப் பிறகு நான் இறந்துவிட்டிருந்ததாக நீ கேள்விப்பட்டாய் என்றும் நீ கூற வேண்டும்,” என்று தெட்சுயா கூறினார்.

தன் தலையை ஆட்டி அதற்குச் சம்மதம் தெரிவித்த அந்த அந்நியன், தன் அம்புகளில் ஒன்றைத் தெட்சுயாவிடம் கொடுத்தான்.

தெட்சுயா தன்னுடைய நீளமான மூங்கில் வில்லின் ஒரு முனையைச் சுவரின்மீது சாய்த்துப் பிடித்து, மறு முனையைத் தரையின்மீது கடினமாக அழுத்தி, அதில் நாணேற்றினார். பிறகு எதுவும் பேசாமல், அருகிலிருந்த மலையை நோக்கி அவர் வேகமாக நடக்கலானார்.

அந்த அந்நியனும் அச்சிறுவனும் அவரைப் பின்தொடர்ந்து சென்றனர். அவர்கள் ஒரு மணிநேரம் நடந்து சென்று ஓரிடத்தில் நின்றனர். அங்கு இரண்டு பெரும் பாறைகளுக்கு நடுவே ஒரு குறுகலான பாதையில் ஓர் ஆறு வேகமாகப் பாய்ந்தோடிக் கொண்டிருந்தது. அந்த ஆற்றைக் கடக்க வேண்டுமென்றால் அந்த இரண்டு பாறைகளையும் இணைத்துக் கொண்டிருந்த ஒரு கயிற்றுப் பாலத்தின்மீது நடந்து செல்ல வேண்டும். ஆனால் அந்தக் கயிற்றுப் பாலம் இற்றுப் போயிருந்ததால், அது எந்நேரத்திலும் அறுந்து விழுந்துவிடக்கூடிய நிலையில் இருந்தது.

தெட்சுயா அந்தக் கயிற்றுப் பாலத்தின்மீது அமைதியாக நடந்து சென்று அதன் மையப் பகுதியை அடைந்தார். அப்பாலம் பயங்கரமாக ஆடியது. மறுபக்கத்திலிருந்த எதையோ நோக்கி அவர் குனிந்து வணங்கிவிட்டு, அந்த அந்நியன் செய்ததைப்போலவே, தன்னுடைய வில்லில் அம்பைப் பூட்டி, அதைத் தன் தலைக்கு மேலே உயர்த்தி, பிறகு அதைத் தன் நெஞ்சுக்கு நேராகக் கொண்டு வந்து அந்த அம்பை எய்தார்.

இருபது மீட்டர் தொலைவிலிருந்த ஒரு பழுத்தப் 'பீச்' பழத்தை அவருடைய அம்பு துளைத்திருந்ததை அந்த அந்நியனும் அச்சிறுவனும் பார்த்தனர்.

மீண்டும் கரைக்குத் திரும்பி வந்த தெட்சுயா, அந்த அந்நியனிடம், "நீ ஒரு செர்ரிப் பழத்தைத் துளைத்தாய். நான் ஒரு பீச் பழத்தைத் துளைத்திருக்கிறேன். செர்ரிப் பழம் பீச் பழத்தைவிடச் சிறியது. மேலும், நீ அதை நாற்பதடி தூரத்திலிருந்து துளைத்தாய். நான் அதில் பாதி தூரத்திலிருந்து துளைத்தேன். எனவே, சற்று முன் நான் நிகழ்த்தியதை நீ நிகழ்த்துவதில் உனக்கு எந்தப் பிரச்சனையும் இருக்காது. எனவே, அந்தப் பாலத்தின் நடுப் பகுதிக்குச் சென்று நின்று கொண்டு, நான் செய்ததைப்போலச் செய்," என்று கூறினார்.

அந்த அந்நியன் பயந்து நடுங்கிக் கொண்டே, இற்றுப் போயிருந்த அந்தப் பாலத்தின் நடுப் பகுதிக்குச் சென்றான். அவனுடைய கால்களுக்குக் கீழே வெகு ஆழத்தில் ஓடிக் கொண்டிருந்த ஆறு அவனுக்குக் கலக்கத்தை ஏற்படுத்தியது. ஆனாலும், முன்பு தான்

கடைபிடித்திருந்த அதே செயல்முறையைப் பின்பற்றி அவன் அந்தப் பீச் மரத்தை நோக்கி ஓர் அம்பை எய்தான். ஆனால் அந்த அம்பு அந்த மரத்தைக் கடந்து சென்றுவிட்டது.

அவன் கரைக்கு வந்து சேர்ந்தபோது அவனுடைய முகம் முற்றிலுமாக வெளுத்துப் போயிருந்தது.

தெட்சுயா அவனிடம், "உன்னிடம் திறமையும் கண்ணியமும் தோரணையும் இருக்கின்றன. வில்வித்தையின் உத்திகளை நீ நன்றாகவே கற்றுத் தேர்ந்திருக்கிறாய். நீ வில்லை வெற்றி கொண்டுள்ளாய், ஆனால் நீ உன் மனத்தை இன்னும் வெற்றி கொள்ளவில்லை. எல்லாச் சூழல்களும் சாதகமாக இருக்கும்போது எப்படி அம்பு எய்வது என்பது உனக்குத் தெரிந்திருக்கிறது. ஆனால் ஓர் ஆபத்தான சூழலில் இருக்கும்போது உன்னால் உன் இலக்கைத் தாக்க முடியவில்லை. ஒரு வில்லாளனால் எப்போதுமே போர்க்களத்தைத் தேர்ந்தெடுக்க முடியாது. அதனால் நீ மீண்டும் உன் பயிற்சியைத் தொடங்கு. சாதகமற்றச் சூழ்நிலைகளுக்கு உன்னைத் தயார்படுத்திக் கொள். வில்லின் மார்க்கத்தில் தொடர்ந்து செல். ஏனெனில், அதுதான் வாழ்க்கைப் பயணத்தின் பாதையும்கூட. குறி பார்த்துத் துல்லியமாக அம்பு எய்வது என்பது வேறு. ஆன்மா அமைதியாக இருக்கும்போது அம்பு எய்வது என்பது முற்றிலும் வேறொரு விஷயம்," என்று கூறினார்.

அந்த அந்நியன் மீண்டும் அவரைப் பணிந்து வணங்கிவிட்டு, தன் தோளில் தொங்கிக் கொண்டிருந்த நீண்ட பையில் தன் வில்லையும் அம்புகளையும் போட்டுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டுச் சென்றுவிட்டான்.

தெட்சுயாவும் அச்சிறுவனும் தங்கள் கிராமத்தை நோக்கித் திரும்பி நடந்து சென்று கொண்டிருந்தபோது அச்சிறுவன் உற்சாக வெள்ளத்தில் நீந்திக் கொண்டிருந்தான்.

"தெட்சுயா, நீங்கள் அந்த அந்நியருக்குச் சரியாகப் பாடம் புகட்டிவிட்டீர்கள்! நீங்கள்தான் வில்வித்தையில் தலைசிறந்த ஆசான்," என்று அவன் குதூகலமாகக் கூறினான்.

“மக்கள் என்ன சொல்ல வருகிறார்கள் என்பதை முதலில் காது கொடுத்துக் கேட்காமல், அவர்களை மதிக்காமல், அவர்களை நாம் ஒருபோதும் எடைபோடக்கூடாது. அந்த அந்நியன் நல்லவன்தான். அவன் என்னை அவமானப்படுத்தவோ அல்லது என்னைவிடத் தான் பெரியவன் என்று நிரூபிக்கவோ முயற்சிக்கவில்லை. அவனுடைய நடத்தை அப்படிப்பட்ட ஒரு தோற்றத்தை உருவாக்கியிருந்திருக்கக்கூடும். அவன் எனக்கு சவால்விட்டதுபோலத் தோன்றினாலும், உண்மையில் அவன் தன்னுடைய கலைத் திறமையை என்னிடம் வெளிக்காட்டித் தற்பெருமை கொள்ளவும் என்னுடைய அங்கீகாரத்தைப் பெறவும்தான் துடித்துக் கொண்டிருந்தான். எதிர்பாராத சோதனைகளை எதிர்கொள்வது வில்லின் மார்க்கத்தின் தவிர்க்கப்பட முடியாத ஒரு பகுதி. துல்லியமாக அதைத்தான் நான் இன்று அந்த அந்நியனுக்கு எடுத்துக் காட்டினேன்.”

“நீங்கள்தான் சிறந்தவர் என்று அந்த அந்நியர் கூறினார். நீங்கள் ஒரு தலைசிறந்த வில்லாளர் என்பதுகூட எனக்குத் தெரியாது. பிறகு ஏன் நீங்கள் ஒரு தச்சராக வேலை பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?”

“வில்லின் மார்க்கம் எல்லாவற்றுக்கும் பொருத்தமானதாக இருக்கும் என்பதுதான் அதற்குக் காரணம். அதோடு, மரக்கட்டைகளைக் கொண்டு வேலை செய்ய வேண்டும் என்பது என்னுடைய கனவாக இருந்தது. அது மட்டுமல்லாமல், வில்லின் மார்க்கத்தைப் பின்பற்றுகின்ற ஒரு வில்லாளனுக்கு ஒரு வில்லோ, ஓர் அம்போ அல்லது ஓர் இலக்கோ தேவைப்படுவதில்லை.”

“இந்த கிராமத்தில் சுவாரசியமான எதுவும் ஒருபோதும் நிகழ்வதில்லை. ஆனால் இப்போது நான் திடீரென்று, வில்வித்தையில் தலைசிறந்த ஓர் ஆசானோடு சேர்ந்து நடந்து கொண்டிருக்கிறேன்,” என்று கூறிப் புளகாங்கிதம் அடைந்த அச்சிறுவன், தன் கண்கள் மிளிர, “வில்லின் மார்க்கம் என்றால் என்ன? அதை உங்களால் எனக்குக் கற்றுத் தர முடியுமா?” என்று கேட்டான்.

“அதைக் கற்றுக் கொடுப்பது ஒன்றும் கடினமானதல்ல. நாம் இப்போது நம்முடைய கிராமத்தை நோக்கி நடந்து சென்று கொண்டிருக்கும்போதே ஒரு மணிநேரத்திற்குள் அதை என்னால் உனக்குக் கற்றுக் கொடுத்துவிட முடியும். ஆனால், நீ தேவையான துல்லியத்தை அடைகின்றவரை அதை நாள்தோறும் பயிற்சி செய்வதுதான் கடினமானது.”

தனக்குக் கற்றுக் கொடுப்பதற்குத் தெட்சுயா சம்மதம் தெரிவிக்க

வேண்டும் என்று அச்சிறுவனின் கண்கள் கெஞ்சியதுபோலத் தோன்றின. தெட்சுயா அடுத்தப் பதினைந்து நிமிடங்களுக்கு மௌனமாக நடந்தார். அவர் மீண்டும் பேசியபோது அவருடைய குரல் மிகவும் இளமையாக ஒலித்தது:

"இன்று நான் மனநிறைவோடு இருக்கிறேன். பல ஆண்டுகளுக்கு முன்பு என்னைக் காப்பாற்றிய ஒரு மனிதரை இன்று நான் கௌரவப்படுத்தியிருக்கிறேன். எனவே, தேவையான அனைத்து விதிமுறைகளையும் நான் உனக்குக் கற்றுக் கொடுக்கிறேன். ஆனால் அதற்கு மேல் என்னால் உனக்கு எதுவும் செய்ய முடியாது. நான் உன்னிடம் கூறுவதை நீ புரிந்து கொண்டால், அந்தப் பாடங்களை உன் விருப்பப்படி நீ எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம். சற்று நேரத்திற்கு முன்பு நீ என்னை ஆசான் என்று அழைத்தாய். ஓர் ஆசான் என்பவர் யார்? என்னைப் பொறுத்தவரை, ஓர் ஆசான் என்பவர், வேறொருவருக்கு ஏதோ ஒன்றைக் கற்றுக் கொடுப்பவர் அல்லர். மாறாக, அந்நபர், தன்னுடைய ஆன்மாவில் ஏற்கனவே ஆழமாகப் பதிந்துள்ள அறிவைத் தானே கண்டறிவதற்குத் தன்னால் இயன்ற அளவு சிறப்பாக முயற்சி செய்வதற்கு அவருக்கு உத்வேகமூட்டுகின்றவர்தான் ஓர் உண்மையான ஆசான்."

அவர்கள் அந்த மலையிலிருந்து கீழே இறங்கிக் கொண்டிருந்த வழியில், வில்லின் மார்க்கத்தைத் தெட்சுயா அச்சிறுவனுக்கு எடுத்துரைத்தார்.

வில்லும் அம்பும் கொடுக்கின்ற மகிழ்ச்சியைப் பிறரோடு பகிர்ந்து கொள்ளாத ஒரு வில்லாளனால் தன்னுடைய சொந்தப் பண்புநலன்களையும் தன்னுடைய குறைபாடுகளையும் ஒருபோதும் அறிந்து கொள்ள முடியாது.

எனவே, நீ எதுவொன்றையும் தொடங்குவதற்கு முன்பு, உன்னுடைய நலன் விரும்பிகளை நீ நாட வேண்டும். நீ ஈடுபடுகின்ற நடவடிக்கைகளில் யார் ஆர்வம் காட்டுகிறார்களோ, அவர்கள்தாம் உன்னுடைய நலன் விரும்பிகள்.

'பிற வில்லாளர்களைத் தேடிச் செல்' என்று நான் கூறவில்லை. வேறு பிற திறமைகளைக் கொண்டவர்களை நீ தேடிக் கண்டுபிடிக்க வேண்டும் என்றுதான் நான் கூறுகிறேன். ஏனெனில், வில்லின் மார்க்கம், உற்சாகத்தோடு பின்பற்றப்படுகின்ற பிற எந்தவொரு பாதையிலிருந்தும் எவ்விதத்திலும் வேறுபட்டதல்ல.

உன்னுடைய நலன் விரும்பிகள், மற்றவர்கள் பார்த்து அதிசயிக்கின்ற நபர்களாக இல்லாமல் போகலாம். "இவரைவிடச் சிறந்தவர் வேறு எவரும் இல்லை!" என்று மற்றவர்கள் பெருமையோடு குறிப்பிடுகின்றவர்களாகவும் அவர்கள் இல்லாமல் போகக்கூடும். மாறாக, தவறுகள் செய்ய அஞ்சாத சாதாரண நபர்களாக அவர்கள் இருப்பர். எனவே, அவர்கள் தவறுகள் செய்கின்றனர். அதனால்தான் அவர்கள் செய்கின்ற வேலைகள் பல சமயங்களில் கண்டு கொள்ளப்படுவதில்லை. ஆனால் அப்படிப்பட்டவர்கள்தாம் இவ்வுலகை மாற்றிக் கொண்டிருக்கின்றனர். பல தவறுகளுக்குப் பிறகு, தங்களுடைய சமூகத்தில் ஒரு குறிப்பிடத்தக்க வித்தியாசத்தை ஏற்படுத்துகின்ற ஏதோ ஒன்றை அவர்கள் செய்து முடித்துவிடுகின்றனர்.

தாங்கள் எந்த மனப்போக்கை சுவீகரிக்க வேண்டும் என்று தீர்மானிப்பதற்கு, விஷயங்கள் நிகழ்வதற்காகக் காத்திருக்கும் பொறுமை அவர்களுக்கு இருப்பதில்லை. அவர்கள் செயலில் இறங்கியபடியே தீர்மானம் மேற்கொள்கின்றனர். இவ்வாறு செய்வது ஆபத்தானதாக இருக்கக்கூடும் என்பதை அறிந்தேதான் அவர்கள் அப்படிச் செய்கின்றனர்.

இப்படிப்பட்ட நபர்களோடு சேர்ந்து வாழ்வது ஒரு வில்லாளனுக்கு முக்கியமானது. ஏனெனில், அவன் தன் இலக்கை எதிர்கொள்வதற்கு முன்பாக, தன்னுடைய வில்லைத் தன்னுடைய நெஞ்சுக்கு நேரே கொண்டு வரும்போது திசையை மாற்றிக் கொள்ளத் தேவையான சுதந்திரம் தனக்கு இருப்பதாக அவன் உணர வேண்டியது இன்றியமையாதது. அவன் தன் கையைத் திறந்து நாணை விடுவிக்கும்போது, அவன் தனக்குத் தானே இவ்வாறு கூறிக் கோள்ள வேண்டும்: "நான் என் வில்லை உயர்த்தி அதை என் முன் நிலைப்படுத்தும்வரை, ஒரு நீண்ட பாதையில் பயணித்து வந்துள்ளேன். நான் தேவையான துணிகர நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளேன் என்பதையும், என்னால் இயன்ற அளவு சிறப்பாகச் செயல்பட்டிருக்கிறேன் என்பதையும் நான் அறிவேன். அந்த அறிதலோடு நான் இந்த அம்பை விடுவிக்கிறேன்."

மற்ற எல்லோரையும்போலச் சிந்திக்காமல் இருப்பவர்களே சிறந்த நலன் விரும்பிகள். அதனால்தான், வில்வித்தைக் குறித்த உன்னுடைய உற்சாகத்தைப் பகிர்ந்து கொள்வதற்கு ஏற்ற நபர்களை நீ தேடும்போது, உன்னுடைய உள்ளுணர்வை மட்டுமே நீ நம்ப வேண்டும், பிறர் என்ன கூறுவார்களோ என்று நீ கவலைப்படத் தேவையில்லை. தங்களால் எது முடியும், எது முடியாது என்பதன் அடிப்படையிலேயே மக்கள் எப்போதும் பிறரை எடைபோடுகின்றனர். அதனால் பிறருடைய அபிப்பிராயங்கள் பெரும்பாலும் பாரபட்சமும் பயமும் நிரம்பியவையாகவே இருக்கும்.

பரிசோதனை முயற்சிகளை மேற்கொள்ளத் தயங்காத, ஆபத்துகளுக்குத் துணிகின்ற, கீழே விழுந்து காயப்பட்டப் பிறகும் மேலும் ஆபத்துகளை எதிர்கொள்ளத் தயாராக இருக்கின்ற நபர்களோடு கைகோர்த்துக் கொள்ளுங்கள். சிந்தனையில் தங்களிடமிருந்து மாறுபட்டுள்ளவர்களை விமர்சிக்கின்றவர்கள், தாங்கள் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் நிச்சயமாக மதிக்கப்படும் என்று உறுதியாகத் தெரியாமல் ஒருபோதும் செயலில் இறங்காதவர்கள், சந்தேகங்களைவிட உத்தரவாதங்களுக்கு முன்னுரிமை கொடுக்கின்றவர்கள் ஆகியோரிடமிருந்து எப்போதும் விலகியே இருங்கள்.

திறந்த மனத்துடன் இருக்கின்ற, பிறரால் காயப்படுத்தப்படக்கூடிய ஒரு நிலையை எதிர்கொள்ள அஞ்சாத நபர்களோடு இணைந்து கொள்ளுங்கள். தங்களுடைய சகாக்களை எடைபோடும் நோக்கத்தில் அல்லாமல், அவர்களுடைய அர்ப்பணிப்பிற்காகவும் துணிச்சலுக்காகவும் அவர்களை மெச்சும் நோக்கத்தில் அவர்களுடைய செயல்பாடுகளைத் தாங்கள் பார்க்கத் தொடங்கும்போதுதான் தங்களால் முன்னேற முடியும் என்பதை இவர்கள் நன்றாகப் புரிந்து வைத்துள்ளனர்.

ஒரு விவசாயிக்கோ அல்லது ரொட்டித் தயாரிக்கும் ஒருவருக்கோ வில்வித்தையின்மீது எந்த ஆர்வமும் இருக்காது என்று நீ நினைக்கக்கூடும். ஆனால், வில்வித்தையில் தாங்கள் பார்க்கின்றவற்றைத் தாங்கள் செய்கின்ற வேலைகளுக்குள் அவர்கள் கண்டிப்பாகப் புகுத்துவர் என்று என்னால் உறுதியாகக் கூற முடியும். நீயும் அதையேதான் செய்வாய்: உன்னுடைய கைகளை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்பதையும், இடுபொருட்களைச் சரியான விகிதத்தில் எவ்வாறு சேர்ப்பது என்பதையும் ஒரு நல்ல ரொட்டித் தயாரிப்பாளரிடமிருந்து நீ கற்றுக் கொள்வாய். பொறுமையைக் கடைபிடிப்பது, கடினமாக உழைப்பது, பருவகால மாற்றங்களை மதிப்பது ஆகியவற்றை ஒரு நல்ல விவசாயியிடமிருந்து நீ கற்றுக் கொள்வாய். அதோடு, புயல் வரும்போது அதைச் சபிக்காமல் இருக்கவும் நீ அவரிடமிருந்து கற்றுக் கொள்வாய். ஏனெனில், புயலைச் சபிப்பது வெறும் நேரம் விரயம் மட்டுமே.

நெகிழ்வுத்தன்மை கொண்ட எந்த மரத்தால் உன் வில் செய்யப்பட்டுள்ளதோ, அந்த மரத்தைப் போன்ற நெகிழ்வுத்தன்மை கொண்ட மக்களோடும், வாழ்க்கைப் பயணத்தின் ஊடாக சகுனங்களைப் புரிந்து கொள்கின்ற மக்களோடும் உன்னைப் பிணைத்துக் கொள். ஏனெனில், கடக்க முடியாத ஒரு தடையை எதிர்கொள்ளும்போதோ அல்லது ஒரு புதிய வாய்ப்பைப் பார்க்கின்றபோதோ தங்களுடைய திசையை மாற்றிக் கொள்ள அவர்கள் தயங்குவதில்லை. நீரின் பண்புநலன்கள் அவர்களிடம் இருக்கின்றன. நீரானது பாறைகளைச் சுற்றி ஓடி ஆற்றின் போக்கோடு செல்லும்; சில நேரங்களில் மதகுகள் நிரம்பும்வரை ஓர் ஏரியில் போய் தேங்கிக் கொள்ள அது தயங்காது; பிறகு அதிலிருந்து வழிந்தோடி மீண்டும் தன் பயணத்தைத் தொடரும்; ஏனெனில், கடல்தான் தன்னுடைய இறுதி இலக்கு என்பதையும், இன்று இல்லாவிட்டாலும் என்றோ ஒரு நாள் தான் அங்கு போய்ச் சேர்ந்தாக வேண்டும் என்பதையும் நீர் ஒருபோதும் மறப்பதில்லை.

நான் வந்து சேர வேண்டிய இடத்திற்கு வந்துவிட்டேன். இதற்கு மேல் நான் எங்கும் போகப் போவதில்லை," என்று ஒருபோதும் சொல்லாத நபர்களுடன் கைகோர்த்துக் கொள்ளுங்கள். குளிர்காலத்தைத் தொடர்ந்து வசந்தகாலம் வருவது எவ்வளவு உறுதியானதோ, அதேபோல, எதுவுமே ஒருபோதும் முடிவடைவதில்லை. நீ உன்னுடைய குறிக்கோளை அடைந்தவுடன், உன்னுடைய பயணத்தின் ஊடாக நீ கற்றுக் கொண்ட அனைத்தையும் பயன்படுத்தி நீ மீண்டும் முதலிலிருந்து தொடங்க வேண்டும்.

பாடுபவர்களோடு, கதை சொல்பவர்களோடு, வாழ்க்கையில் இனிமை காண்பவர்களோடு, கண்களில் மகிழ்ச்சி பொங்கி வழியும் நபர்களோடு நீ இணைந்து கொள். ஏனெனில், மகிழ்ச்சி பிறரை எளிதாகத் தொற்றிக் கொள்ளக்கூடிய ஒன்று. மேலும், மனச்சோர்வு, தனிமை, இன்னல்கள் ஆகியவற்றால் பிறர் முடங்கிப் போய்விடாதபடி அதனால் தடுக்க முடியும்.

தங்களுடைய வேலைகளை உத்வேகத்துடன் செய்கின்ற நபர்களோடு நீ சேர்ந்து கொள். அவர்கள் எந்த அளவு உனக்குப் பயனுள்ளவர்களாக இருப்பார்களோ, அதே அளவு உன்னாலும் அவர்களுக்குப் பயனுள்ளவனாக இருக்க முடியும் என்பதால், நீ அவர்களோடு பழகும்போது, அவர்கள் பயன்படுத்துகின்ற கருவிகளைப் புரிந்து கொள்ளவும், அவர்களுடைய திறமைகளை எவ்வாறு மேம்படுத்த முடியும் என்பதைப் புரிந்து கொள்ளவும் முயற்சி செய்.

நீ உன்னுடைய வில்லையும், உன்னுடைய அம்பையும், உன்னுடைய இலக்கையும், உன்னுடைய வழியையும் எதிர்கொள்வதற்கான வேளை வந்துவிட்டது.

வில்தான் ஜீவன். அனைத்து ஆற்றலின் மூலாதாரம் அதுதான்.

அம்பு என்றேனும் ஒரு நாள் விடைபெற்றுக் கொண்டு போய்விடும்.

இலக்கு எங்கோ வெகு தொலைவில் இருக்கிறது.

ஆனால் வில் மட்டும் எப்போதும் உன்னுடன் இருக்கும். எனவே, அதை எப்படிப் பராமரித்துப் பாதுகாப்பது என்பதை நீ அறிந்திருக்க வேண்டும்.

வில் எப்போதும் பயன்படுத்தப்பட்டுக் கொண்டே இருக்கக்கூடாது. அதற்குச் சிறிது ஓய்வும் தேவை. எப்போதும் நாணேற்றப்பட்டுத் தயார் நிலையில் வைக்கப்பட்டிருக்கும் ஒரு வில் வலுவிழந்துவிடும். எனவே, அது தன்னுடைய திண்மையை மீண்டும் பெறுவதற்குத் தேவையான ஓய்வை நீ அதற்குக் கொடுக்க வேண்டும். பிறகு நீ அதில் நாணேற்றும்போது, அந்த வில் வலிமை வாய்ந்ததாகவும் மனநிறைவு கொண்டதாகவும் இருக்கும்.

வில்லுக்கு மனசாட்சி கிடையாது. அது அந்த வில்லாளனின் கை மற்றும் விருப்பத்தின் நீட்சி மட்டுமே. கொல்வதற்கும் அதைப் பயன்படுத்தலாம், தியானத்திற்கும் அதைப் பயன்படுத்தலாம். எனவே, உன்னுடைய நோக்கம் குறித்து நீ எப்போதும் தெளிவாக இருக்க வேண்டும்.

வில் வளைந்து கொடுக்கும் தன்மை கொண்டது என்றாலும் அதற்கென்று சில வரம்புகள் உள்ளன. அதன் தாங்குதிறனைத் தாண்டி அதை வளைத்தால், அது ஒடிந்து போகும் அல்லது தன்னைப் பிடித்திருக்கும் கையை அது சோர்வடையச் செய்துவிடும். எனவே, நீ எப்போதும் உன் கருவியோடு இணக்கமாக இருந்து கொள். அக்கருவியால் எவ்வளவு கொடுக்க முடியுமோ, அதற்கு மேல் அதனிடம் ஒருபோதும் கேட்காதே.

ஒரு வில், ஒரு வில்லாளனின் கையில் ஓய்வாக இருக்கும் அல்லது முறுக்கேற்றப்பட்ட நிலையில் இருக்கும். ஆனால் அந்தக் கை, வெறுமனே உடலின் அனைத்துத் தசைகளும், அந்த வில்லாளனின் அனைத்து நோக்கங்களும், அம்பை எய்வதற்கான அனைத்து முயற்சிகளும் ஒன்றுகுவிக்கப்பட்டுள்ள ஓரிடம் மட்டுமே. எனவே, வில்லை நாணேற்றி அம்பு தொடுக்க நீ தயாராக இருக்கும்போது உன் தோரணை மிடுக்கானதாகவும் நேர்த்தியானதாகவும் இருக்க வேண்டும் என்றால், ஒவ்வொரு பாகமும் எதைச் செய்ய வேண்டுமோ அதை மட்டுமே செய்வதையும் உன் ஆற்றல்கள் சிதறடிக்கப்படாமல் இருப்பதையும் நீ உறுதி செய்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால், களைப்பின்றி உன்னால் பல அம்புகளை எய்ய முடியும்.

நீ உன்னுடைய வில்லை முழுமையாகப் புரிந்து கொள்ள விரும்பினால், அது உன்னுடைய கையின் ஒரு பகுதியாகவும் உன் எண்ணத்தின் நீட்சியாகவும் ஆகியிருக்க வேண்டும்.

அம்புதான் நோக்கம்.

வில்லின் வலிமையை இலக்கின் மையத்துடன் இணைப்பது இந்த அம்புதான்.

நோக்கம் தெள்ளத் தெளிவானதாகவும் நேரடியானதாகவும் சமநிலை கொண்டதாகவும் இருக்க வேண்டும்.

வில்லிலிருந்து விடுவிக்கப்படுகின்ற அம்பு ஒருபோதும் திரும்பி வராது. அதனால், நாண் முழுமையாக இழுக்கப்பட்டுவிட்டது என்பதாலோ அல்லது இலக்கு நமக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது என்பதாலோ அவசரப்பட்டு அம்பை எய்வதைவிட, அந்த அம்பு விடுவிக்கப்படுகின்ற கணத்திற்கு உன்னை இட்டு வந்த அனைத்து இயக்கங்களும் போதிய அளவு கச்சிதமாகவும் சரியாகவும் இல்லை என்பதை நீ உணரும் பட்சத்தில் அந்த அம்பை எய்வதை நிறுத்திவிடுவது மேலானது.

ஆனால், ஏதேனும் தவறு செய்துவிடுவோமோ என்ற பயம்தான் உன்னை முடக்கிப் போடுகிறது என்றால், அம்பு எய்வதிலிருந்து ஒருபோதும் பின்வாங்காதே. நீ மேற்கொண்டிருந்த இயக்கங்கள் அனைத்தும் சரியாக இருக்கும் பட்சத்தில், கையை விரித்து, நாணை விடுவித்துவிடு. ஒருவேளை உன் அம்பு உன் இலக்கைத் தாக்கத் தவறியிருந்தால்கூட, அடுத்த முறை உன்னுடைய குறியை எவ்வாறு மேம்படுத்தலாம் என்பதை நீ கற்றுக் கொள்வாய்.

நீ ஆபத்துக்குத் துணியாவிட்டால், நீ எத்தகைய மாற்றங்களை மேற்கொள்ள வேண்டும் என்பது உனக்கு ஒருபோதும் தெரியாமலேயே போய்விடும்.

ஒவ்வோர் அம்பும் உன் இதயத்தில் ஒரு நினைவை விட்டுச் செல்லும். அவற்றின் கூட்டு விளைவே அம்பு எய்வதில் உன்னை மேன்மேலும் சிறந்தவனாக ஆக்கும்.

இலக்கு என்பது நாம் அடைய விரும்புகின்ற குறிக்கோளாகும்.

ஒரு வில்லாளன்தான் தன்னுடைய இலக்கைத் தேர்ந்தெடுக்கிறான். அந்த இலக்கு மிகவும் தொலைவில் இருந்தாலும்கூட, நாம் அதைத் தாக்கத் தவறும்போது நம்மால் அந்த இலக்கைக் குறை கூற முடியாது. வில்லின் மார்க்கத்தின் அழகு இதில்தான் அடங்கியுள்ளது: 'உன்னுடைய எதிரி உன்னைவிட அதிக வலிமை வாய்ந்தவனாக இருந்தான் என்று ஒரு சாக்குப்போக்கைச் சொல்லி உன்னால் ஒருபோதும் தப்பித்துக் கொள்ள முடியாது.'

இலக்கைத் தேர்ந்தெடுத்தது நீதான் என்பதால் அதற்கான முழுப் பொறுப்பு உன்னுடையதுதான்.

உன்னுடைய இலக்கு பெரியதாக இருக்கலாம், சிறியதாக இருக்கலாம், வலது பக்கமாக இருக்கலாம் அல்லது இடது பக்கமாக இருக்கலாம், ஆனால் நீ எப்போதும் அதன் முன்னால் நிற்க வேண்டும், அதை மதிக்க வேண்டும், உன் மனக்கண்ணில் அதை நீ உன் அருகே கொண்டு வர வேண்டும். மனத்தளவில் அது உன்னுடைய அம்பின் முனைவரை வந்த பிறகுதான் நீ உன் வில்லின் நாணை விடுவிக்க வேண்டும்.

இலக்கை நீ உன்னுடைய எதிரியாகக் கருதினால் நீ அதைத் துல்லியமாகத் தாக்கக்கூடும், ஆனால் அகரீதியாக நீ உன்னை எந்த விதத்திலும் மேம்படுத்திக் கொள்ள மாட்டாய். வெறுமனே ஒரு காகிதத்தின் மையத்தையோ அல்லது ஒரு மரத்தின் மையத்தையோ உன் அம்பைக் கொண்டு துளைக்க முயற்சிப்பதிலேயே உன் வாழ்க்கையை நீ கழித்துக் கொண்டிருப்பாய். ஆனால் அது முற்றிலும் அர்த்தமற்றது. மேலும், நீ பிறரோடு இருக்கும்போது, வாழ்வில் சுவாரசியமான எதையும் நீ ஒருபோதும் செய்வதில்லை என்று நீ அவர்களிடம் புலம்பிக் கொண்டிருப்பாய்.

அதனால்தான், நீ உன் இலக்கைத் தேர்ந்தெடுத்துவிட்டு, அதைத் தாக்குவதற்கு உன்னால் முடிந்த அளவு சிறப்பாக முயற்சி செய்ய வேண்டும்; உன் இலக்கை நீ எப்போதும் மதிப்புடனும் கண்ணியத்துடனும் அணுக வேண்டும். உன் இலக்கிற்கான அர்த்தத்தை நீ அறிந்திருக்க வேண்டும். அந்த இலக்கைத் தாக்குவதற்கு நீ எவ்வளவு முயற்சிகளும் பயிற்சிகளும் மேற்கொள்ள வேண்டியிருந்தது என்பதையும், உன் உள்ளுணர்வை எந்த அளவு நீ பயன்படுத்த வேண்டியிருந்தது என்பதையும் நீ அறிந்திருக்க வேண்டும்.

நீ உன் இலக்கைப் பார்க்கும்போது, வெறுமனே அதன்மீது மட்டும் உன்னுடைய கவனத்தைக் குவிக்காமல்,

அதைச் சுற்றி நிகழ்ந்து கொண்டிருக்கின்ற அனைத்தின்மீதும் நீ கவனம் செலுத்த வேண்டும். ஏனெனில், நீ உன் அம்பை விடுவித்ததும், காற்று, எடை, தூரம் போன்ற, நீ கவனிக்கத் தவறிய பல அம்சங்களை அது எதிர்கொள்கிறது.

நீ உன் இலக்கைப் புரிந்து கொள்ள வேண்டும். பின்வரும் கேள்விகளை உன்னை நீயே தொடர்ந்து கேட்டு வர வேண்டும்: "நான் அந்த இலக்காக இருக்கும்பட்சத்தில், நான் எங்கே இருக்கிறேன்? வில்லாளன் எத்தகைய கௌரவத்திற்குத் தகுதியானவனோ, அந்த கௌரவம் அவனுக்குக் கிடைக்கக்கூடிய விதத்தில் நான் எவ்வாறு தாக்கப்பட விரும்புவேன்?"

ஒரு வில்லாளன் இருந்தால்தான் ஓர் இலக்கு இருக்கும். அந்த இலக்கைத் தாக்க வேண்டும் என்று அந்த வில்லாளன் கொண்டுள்ள விருப்பம்தான் அந்த இலக்கின் இருத்தலை நியாயப்படுத்துகிறது. இல்லையேல், அது வெறும் சடப் பொருள் மட்டுமே, முக்கியத்துவமற்ற ஒரு காகிதம் அல்லது மரக்கட்டை மட்டுமே.

அம்பு எப்படித் தன் இலக்கைத் தேடுகிறதோ, அதேபோல இலக்கும் அம்பைத் தேடுகிறது. ஏனெனில், அந்த அம்புதான் அந்த இலக்கின் இருத்தலுக்கான அர்த்தத்தைக் கொடுக்கிறது. இனியும் அது ஒரு காகிதமோ அல்லது ஒரு மரக்கட்டையோ அல்ல. ஒரு வில்லாளனைப் பொறுத்தவரை அதுதான் உலகின் மையமாகும்.

வில்லையும் அம்பையும் இலக்கையும் நீ புரிந்து கொண்டவுடன், எவ்வாறு அம்பு எய்ய வேண்டும் என்பதைக் கற்றுக் கொள்ளத் தேவையான மனஅமைதியும் நேர்த்தியும் உன்னிடம் இருக்க வேண்டும்.

மனஅமைதி இதயத்திலிருந்து வருகிறது. இதயம் பல சமயங்களில் பாதுகாப்பின்மை குறித்த எண்ணங்களால் அலைக்கழிக்கப்படுகின்றபோதிலும், சரியான தோரணையின் வாயிலாக, தன்னால் முடிந்த அளவு சிறப்பாகச் செயல்பட முடியும் என்பதை அது அறிந்துள்ளது.

நேர்த்தி என்பது மேலோட்டமான ஒன்றல்ல, மாறாக, ஒருவன் தன் வாழ்க்கையையும் வேலையையும் கௌரவப்படுத்துகின்ற விதம் அது. சில சமயங்களில், உன்னுடைய தோரணை உனக்கு அசௌகரியமாக இருப்பதாக நீ உணரக்கூடும். அது தவறு என்றோ அல்லது செயற்கையானது என்றோ கருதாதே. அந்த உணர்வு மெய்யானதுதான். அது கடினமானதாக இருப்பதுதான் அதற்குக் காரணம். அந்த இலக்கு, வில்லாளனின் கண்ணியத்தால் தான் கௌரவப்படுத்தப்பட்டுள்ளதாக உணர்வதற்கு அது இடமளிக்கிறது.

தோரணைகளில் மிகவும் அசௌகரியமானது நேர்த்தியாக இருப்பதுதான். ஆனால் நீ கச்சிதமாக அம்பு எய்து உன் இலக்கைத் துல்லியமாகத் தாக்க வேண்டும் என்று நீ விரும்பினால், அதற்கு உதவக்கூடிய மிகச் சிறந்த தோரணை அதுதான்.

மேலோட்டமாக இருக்கின்ற அனைத்தும் களையப்பட்டு, எளிமையையும் கவனக்குவிப்பையும் ஒரு வில்லாளன் கண்டு கொள்ளும்போது நேர்த்தி அடையப்படுகிறது. தோரணை எவ்வளவு எளிமையானதாகவும் சலனமற்றதாகவும் இருக்கிறதோ, அது அவ்வளவு அழகானதாக இருக்கிறது.

பனி அழகாக இருப்பதற்குக் காரணம் அது ஒரே ஒரு நிறத்தை மட்டுமே கொண்டுள்ளதுதான். கடல் அழகாக இருப்பதற்குக் காரணம் அதன் மேற்புறம் முற்றிலும் தட்டையாக இருப்பதுபோலத் தோன்றுவதுதான்; ஆனால், கடல், பனி ஆகிய இரண்டுமே ஆழமானவை. அவை தம்முடைய சொந்தப் பண்புகளை நன்றாக அறிந்துள்ளன.

ஓர் அம்பைத் தாங்கிப் பிடித்திருப்பது என்பது நீ உன்னுடைய நோக்கத்தோடு தொடர்பு கொண்டிருப்பதாகும்.

நீ உன்னுடைய அம்பை அதன் ஒரு முனையிலிருந்து மறு முனைவரை முழுமையாக ஆய்வு செய்து, அது பாய்ந்து செல்ல அதை வழிநடத்துகின்ற அதன் இறகுகள் கச்சிதமாகப் பொருத்தப்பட்டுள்ளனவா என்பதைச் சரிபார்க்க வேண்டும். மேலும், உன்னுடைய அம்பின் முனை கூர்மையாக இருப்பதையும் நீ உறுதி செய்து கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு முறை நீ ஓர் அம்பைத் தொடுக்கும்போதும், முந்தைய முறை அதை நீ எய்ததால் அது வளைந்தோ அல்லது நெளிந்தோ போயிருக்காமல் நேராக இருப்பதை நீ உறுதி செய்து கொள்ள வேண்டும்.

அம்பு எளிமையானதாகவும் லேசானதாகவும் இருப்பதால், அது எளிதில் முறிந்து போகக்கூடியதுபோலத் தோன்றக்கூடும். ஆனால், வில்லாளனின் வலிமையின் உதவியுடன், அந்த அம்பால் அவனுடைய உடலின் ஆற்றலையும் மனத்தின் ஆற்றலையும் வெகுதூரம் கொண்டு செல்ல முடியும். ஒரு முறை ஓர் ஒற்றை அம்பு ஒரு பெரிய கப்பலை மூழ்கடித்திருந்ததாக ஒரு கதை காலங்காலமாகச் சொல்லப்பட்டு வந்துள்ளது. மரத்தால் செய்யப்பட்டிருந்த அக்கப்பலின் எந்தப் பகுதி பலவீனமாக இருந்தது என்பதை அந்த வில்லாளன் அறிந்திருந்ததால், அவன் அப்பகுதியைக் குறி பார்த்துத் தன் அம்பை எய்து அக்கப்பலில் ஒரு துளையை ஏற்படுத்தினான். அத்துளையின் வழியாக நீர் அக்கப்பலுக்குள் மெல்ல மெல்லக் கசிந்து இறுதியில் அக்கப்பலைக் கடலுக்குள் மூழ்கடித்தது. தன்னுடைய கிராமத்தைக் கைப்பற்றும் நோக்கத்துடன் அக்கப்பலில் வந்த ஆக்கிரமிப்பாளர்களால் தன்னுடைய கிராமத்திற்கு வரவிருந்த ஆபத்தை அவன் இவ்விதத்தில் முறியடித்தான் என்று அக்கதை கூறுகிறது.

ஓர் அம்பு என்பது ஒரு வில்லாளனின் கையிலிருந்து விடுபட்டுத் தன்னுடைய இலக்கை நோக்கிப் பயணிக்கின்ற ஒரு நோக்கமாகும். அதாவது, அது சுதந்திரமாகப் பறந்து செல்கிறது; அது விடுவிக்கப்படும்போது அதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டப் பாதையை அது பின்தொடர்ந்து செல்லும்.

காற்றும் புவியீர்ப்பு விசையும் அதன்மீது தாக்கம் ஏற்படுத்தும் என்றாலும், அவை அந்த அம்பினுடைய ஏவுபாதையின் இயல்பான ஒரு பகுதியாகும். ஒரு புயல் தாக்கியதால் ஒரு மரத்திலிருந்து உதிர்கின்ற ஓர் இலை, அவ்வாறு உதிர்கின்ற ஒரே காரணத்தால் இனியும் ஓர் இலையாக இல்லாமல் போவதில்லை.

ஒரு மனிதனின் நோக்கம் கச்சிதமானதாக, நேரடியானதாக, கூர்மையானதாக, உறுதியானதாக, மற்றும் துல்லியமானதாக இருக்க வேண்டும். அந்த நோக்கம் தனக்கும் தான் அடைய வேண்டிய இலக்கிற்கும் இடைப்பட்ட தூரத்தைக் கடந்து செல்லும்போது யாராலும் அதைத் தடுத்து நிறுத்த முடியாது.

உன்னை அமைதிப்படுத்திக் கொண்டு ஆழமாக மூச்சிழுத்துவிடு.

உன்னுடைய ஒவ்வோர் அசைவையும் உன்னுடைய நலன் விரும்பிகள் கவனித்துக் கொண்டிருப்பர். தேவைப்படும்போது அவர்கள் உன் உதவிக்கு வருவர்.

அதே நேரத்தில், உன் எதிரியும் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதை நீ மறந்துவிடாதே. உறுதியான கைகளுக்கும் உறுதியற்றக் கைகளுக்கும் இடையேயான வேறுபாட்டை அவன் அறிவான். எனவே, நீ பதற்றமாக இருந்தால், ஆழமாக சுவாசி. ஏனெனில், நீ ஒவ்வொரு நிலையிலும் ஒருமித்த கவனம் செலுத்துவதற்கு அது உனக்கு உதவும்.

நீ உன்னுடைய வில்லை எடுத்து அதை நேர்த்தியாகக் கொண்டு வந்து உன் உடலின் முன்னால் உறுதியாகப் பிடித்து அம்பு தொடுக்கத் தயாராக நிற்கின்ற அக்கணத்தில், உன்னை அக்கணத்திற்கு இட்டு வந்த ஒவ்வொரு கட்டத்தையும் உன் மனக்கண்ணில் ஓடவிட்டுப் பார்க்க முயற்சி செய்.

ஆனால் இதை நீ எந்தப் பதற்றமும் இன்றிச் செய்ய வேண்டும். ஏனெனில், அனைத்து விதிமுறைகளையும் உன் தலைக்குள் வைத்திருப்பது இயலாத காரியம். நீ ஓர் அமைதியான மனத்துடன் ஒவ்வொரு கட்டத்தையும் அலசி ஆய்வு செய்யும்போது, நீ எதிர்கொண்ட அனைத்துக் கடினமான கணங்களையும், அவற்றிலிருந்து நீ எப்படி மீண்டாய் என்பதையும் உன்னால் மீண்டும் பார்க்க முடியும்.

இது உனக்குத் தன்னம்பிக்கையைக் கொடுக்கும், உன் கை உதறல் நின்றுவிடும்.

வில் என்பது ஓர் இசைக் கருவி. அதன் நாணிலிருந்துதான் அதன் நாதம் உருவாகிறது.

நாண் மிகவும் பெரியது. ஆனாலும், அம்பு அந்த நாணின் ஒரே ஒரு புள்ளியை மட்டுமே தொடும். எனவே, ஒரு வில்லாளனின் அனைத்து அறிவும் அனுபவமும் அந்த ஒற்றைப் புள்ளியின்மீது ஒருமுகப்படுத்தப்பட வேண்டும்.

அவன் வலப்புறமோ அல்லது இடப்புறமோ சிறிது சாய்ந்து நின்றாலோ, அல்லது அந்தப் புள்ளி அவனுடைய இலக்கின் நேர்க்கோட்டிற்கு மேலேயோ அல்லது கீழேயோ இருந்தாலோ, அவனால் தன் இலக்கைத் தாக்க முடியாமல் போய்விடும்.

எனவே, நீ நாணை இழுக்கும்போது, ஓர் இசைக் கருவியை வாசிக்கின்ற ஓர் இசைக் கலைஞனைப்போல நீ இருக்க வேண்டும். இசையைப் பொறுத்தவரை, வெளியைவிடக் காலமே அதிக முக்கியமானது. இசைக் குறிப்பேட்டின் ஒரு வரியில் எழுதப்பட்டிருக்கின்ற இசைக் குறிப்புகளுக்குத் தனியாக எந்த அர்த்தமும் கிடையாது. ஆனால் அதில் எழுதப்பட்டிருப்பவற்றைப் படித்துப் புரிந்து கொள்கின்ற ஒருவனால் அந்த வரிகளை ஒலிகளாகவும் தாளங்களாகவும் மாற்ற முடியும்.

எப்படி ஒரு வில்லாளன் ஓர் இலக்கின் இருத்தலை நியாயப்படுத்துகிறானோ, அதேபோல ஓர் அம்பு ஒரு வில்லின் இருத்தலை நியாயப்படுத்துகிறது. ஒரு கையால் ஓர் அம்பை எடுத்து வீசியெறிய முடியும், ஆனால் ஓர் அம்பு இல்லாத வில்லால் எந்தப் பயனும் இல்லை.

எனவே, நீ உன்னுடைய கைகளை விரிக்கும்போது, நீ உன்னுடைய வில்லை வளைத்துக் கொண்டிருப்பதாக எண்ணாதே. மாறாக, உன்னுடைய அம்புதான் சலனமற்ற, நிலையான மையம் என்றும், நீ உன் வில்லின் இரண்டு முனைகளையும் நாணையும் அருகருகே கொண்டு வர முயற்சி செய்து கொண்டிருப்பதாகவும் நினைத்துக் கொள். பிறகு நாணை மென்மையாகத் தொடு; ஒத்துழைக்கும்படி அதனிடம் கேள்.

வில்வித்தைப் பயிற்சியில் தாங்கள் பல ஆண்டுகள் ஈடுபட்டு வந்துள்ளபோதிலும், தங்களுடைய இதயம் பதற்றத்துடன் துடிப்பதாகவும், தங்களுடைய கைகள் நடுங்குவதாகவும், தங்களுடைய குறி தவறுவதாகவும் பல வில்லாளர்கள் குறை கூறுகின்றனர். ஒரு வில்லாலோ அல்லது ஓர் அம்பாலோ எதையும் மாற்ற முடியாது என்பதையும், வில்வித்தை நம்முடைய தவறுகளை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது என்பதையும் அவர்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

வாழ்க்கையின்மீதான நேசத்தை நீ இழந்திருக்கின்ற ஒரு நாளில், உன்னுடைய குறி குழப்பமானதாகவும் கடினமானதாகவும் இருக்கும். நாணை முழுமையாகப் பின்னால் இழுப்பதற்கான வலிமைகூட உன்னிடம் இல்லாதிருப்பதையும், உன்னுடைய வில்லைத் தேவையான அளவு உன்னால் வளைக்க முடியவில்லை என்பதையும் நீ காண்பாய்.

உன்னுடைய குறி மோசமாக இருப்பதை நீ காண்கின்ற அந்தக் காலை வேளையில், உன்னால் துல்லியமாகக் குறி பார்க்க முடியாமல் போனதற்கான காரணத்தைக் கண்டுபிடிக்க நீ முயற்சிப்பாய். அப்போது, அக்கணம்வரை திரைமறைவில் இருந்து உன்னைத் தொந்தரவு செய்து வந்துள்ள ஒரு பிரச்சனையை நீ நேருக்கு நேர் எதிர்கொள்ள வேண்டியிருக்கும்.

இதற்கு நேரெதிரானதும் நடக்கக்கூடும்: உன்னுடைய குறி துல்லியமாக இருக்கிறது; உன்னுடைய நாண் ஓர் இசைக் கருவியைப்போல ரீங்காரமிடுகிறது; உன்னைச் சுற்றிலும் பறவைகள் பாடித் திரிகின்றன. அப்போது, நீ உன்னால் முடிந்த அளவு மிகச் சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருப்பதை நீ உணர்ந்து கொள்கிறாய்.

ஆனாலும், காலையில் நீ உன் அம்பை எய்யும் விதத்தைப் பற்றிப் பெரிதாக எதுவும் நினைத்துக் கொள்ளாதே - நீ சிறப்பாக எய்தாலும் சரி அல்லது மோசமாக எய்தாலும் சரி. இன்னும் ஏராளமான நாட்கள் உன் முன்னால் இருக்கின்றன. ஒவ்வோர் அம்புமே ஒரு வாழ்க்கைதான்.

எது உனக்கு நடுக்கத்தைக் கொடுக்கிறது என்பதைக் கண்டுபிடிப்பதற்கு உன்னுடைய மோசமான கணங்களைப் பயன்படுத்திக் கொள். உள்ளார்ந்த அமைதிக்கான உன்னுடைய பாதையைக் கண்டுபிடிக்க உன்னுடைய நல்ல கணங்களைப் பயன்படுத்திக் கொள்.

பயத்தின் காரணமாகவோ அல்லது மகிழ்ச்சியின் காரணமாகவோ அம்பு எய்வதை மட்டும் நிறுத்திவிடாதே. ஏனெனில், வில்லின் மார்க்கம் முடிவற்றது.

அம்பு எய்வதில் இரண்டு வகைகள் இருக்கின்றன.

ஆத்மார்த்தமான ஈடுபாடு இல்லாமல் வெறுமனே துல்லியமாக அம்பு எய்வது முதல் வகை. இவ்விதத்தில் அம்பு எய்யும் ஒரு வில்லாளன், வில்வித்தையின் உத்திகளில் மேதமை பெற்றிருந்தாலும்கூட, அவன் தன்னுடைய இலக்கின்மீது மட்டுமே தன் கவனத்தைக் குவித்துள்ளான். இதன் காரணமாக, அவன் வளர்ச்சியடையாமல் ஒரு தேக்க நிலையை அடைந்துவிடுகிறான். பிறகு, என்றேனும் ஒரு நாள், எல்லாமே ஒரு சடங்குபோல ஆகியிருப்பதைக் கண்டு வில்லின் மார்க்கத்தையே அவன் ஒட்டுமொத்தமாகக் கைவிட்டுவிடுவான்.

இரண்டாவது வகை, ஆத்மார்த்தமான ஈடுபாட்டுடன் அம்பு எய்வதாகும். இதில் ஒரு வில்லாளனின் நோக்கம் அவனுடைய அம்பின் பயணமாக உருமாறும்போது, சரியான கணத்தில் அவனுடைய கைகள் திறக்கின்றன; நாணின் ஒலி அங்குள்ள பறவைகளைப் பாட வைக்கிறது; தொலைவிலிருக்கும் இலக்கைத் தாக்குகின்ற அந்தச் செயல், ஒருவர் தன்னைத்தானே எதிர்கொள்கின்ற ஓர் உணர்வைக் கிளர்ந்தெழச் செய்கிறது.

நாணை வளைக்கவும், சரியான முறையில் சுவாசிக்கவும், இலக்கின்மீது கவனத்தைக் குவிக்கவும், நோக்கத்தைத் தெளிவுபடுத்தவும், நேர்த்தியான தோரணையைத் தக்கவைத்துக் கொள்ளவும், இலக்கை மதிக்கவும் எவ்வளவு முயற்சி தேவைப்பட்டது என்பதை நீ அறிவாய். ஆனால், நீ இன்னொரு விஷயத்தையும் புரிந்து கொள்ள வேண்டும்: இவ்வுலகில் எதுவுமே நம்மோடு நீண்டகாலம் தங்குவதில்லை. ஒரு குறிப்பிட்டக் கணத்தில், நீ உன்னுடைய கையைத் திறந்து, உன்னுடைய நோக்கம் தன்னுடைய இலக்கைப் பின்தொடர்ந்து செல்ல நீ அனுமதித்தாக வேண்டும்.

எனவே, அந்த நேர்த்தியான தோரணைக்கும் சரியான நோக்கத்திற்கும் இட்டு வந்த அனைத்து நடவடிக்கைகளையும் நீ எவ்வளவுதான் நேசித்தாலும், உன்னுடைய அம்பின் இறகுகளையும் அதன் கூர்மையையும் அதன் வடிவத்தையும் கண்டு நீ எவ்வளவுதான் பிரமித்தாலும், அந்த அம்பு உன்னுடைய வில்லிலிருந்து விடுபட்டே ஆக வேண்டும்.

ஆனால், ஒரு வில்லாளன் தன் அம்பை விடுவிக்கத் தீர்மானிப்பதற்கு முன்பு அந்த அம்பால் விடுபட முடியாது. ஏனெனில், அதனால் வெகுதூரம் பயணிக்க முடியாது.

ஒரு வில்லாளன் கச்சிதமான தோரணையை அடைந்து அவனுடைய கவனம் அந்த இலக்கின்மீது ஒன்றுகுவிகின்ற அந்தக் குறிப்பிட்டக் கணம் கடந்துவிட்டால், அந்த அம்பால் வில்லிலிருந்து விடுபட முடியாது. ஏனெனில், அந்தத் தோரணையையும் கவனக்குவிப்பையும் அடைவதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளால் உடல் களைத்துவிடும். இதனால் அந்த வில்லாளனின் கை நடுங்கத் தொடங்கிவிடும்.

வில்லும் வில்லாளனும் இலக்கும் பிரபஞ்சத்தின் ஒரே புள்ளியில் இருக்கின்ற அக்கணத்தில்தான் அம்பு விடுபட வேண்டும். இது உத்வேகம் என்று அழைக்கப்படுகிறது.

ஒரு செயல்நடவடிக்கை என்பது ஓர் எண்ணத்தின் வெளிப்பாடாகும்.

ஒரு சிறு உடலசைவுகூட நம்மைக் காட்டிக் கொடுத்துவிடும். எனவே, நாம் எல்லாவற்றையும் மெருகேற்ற வேண்டும், நுணுக்கமான விஷயங்கள் குறித்துச் சிந்திக்க வேண்டும், உத்திகள் நம்முடைய உள்ளுணர்வோடு ஐக்கியமாகின்ற விதத்தில் நாம் அவற்றைக் கற்றுக் கொள்ள வேண்டும். ஒரு சடங்குபோல மேற்கொள்ளப்படுகின்ற நடவடிக்கைகளுக்கும் உள்ளுணர்வுக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. உள்ளுணர்வு என்பது உத்திகளைக் கடந்த ஒரு மனநிலையோடு தொடர்புடையது.

தேவையான அளவு பயிற்சிக்குப் பிறகு, தேவையான அசைவுகளைப் பற்றி நாம் யோசித்துக் கொண்டிருப்பதில்லை. அவை நம் இருத்தலின் ஒரு பகுதியாக ஆகிவிடுகின்றன. ஆனால் அது நிகழ வேண்டுமென்றால், நீ தொடர்ந்து மீண்டும் மீண்டும் பயிற்சி செய்ய வேண்டும்.

அதுவும் போதாதென்றால், நீ மீண்டும் கூடுதலாகப் பயிற்சி செய்ய வேண்டும்.

குதிரைகளுக்குத் திறமையாக லாடம் அடிப்பவர் இரும்போடு வேலை செய்வதை நீ பார்த்திருப்பாய். பழக்கப்பட்டிராத கண்களுக்கு, அவர் வெறுமனே ஒரு சுத்தியலைக் கொண்டு மீண்டும் மீண்டும் அடித்துக் கொண்டிருப்பதைப்போலத்தான் தோன்றும்.

ஆனால் வில்லின் மார்க்கத்தை அறிந்து வைத்திருப்பவர்கள், அந்நபர் தன்னுடைய சுத்தியலை ஓங்கி அடிக்கும் ஒவ்வொரு முறையும் அந்த அடியின் தீவிரத்தில் நுண்ணிய வேறுபாடு இருப்பதை அறிவர். அவருடைய கை மீண்டும் மீண்டும் அதே அசைவையே மேற்கொள்கிறது, ஆனால் அது இரும்பை நெருங்கும்போது, அதைக் கூடுதல் விசையுடன் தொட வேண்டுமா அல்லது குறைவான விசையுடன் தொட வேண்டுமா என்பதை அது புரிந்திருக்கிறது.

மீண்டும் மீண்டும் மேற்கொள்ளப்படுகின்ற எந்தவொரு நடவடிக்கைக்கும் இது பொருந்தும். அது வெளிப் பார்வைக்கு ஒரே மாதிரியானதாகத் தெரிந்தாலும், அது எப்போதும் வேறுபட்டுத்தான் இருக்கும்.

ஒரு காற்றாலையைப் பாருங்கள். அதை ஒரே ஒரு முறை தற்செயலாகப் பார்ப்பவர்களுக்கு அதன் காற்றாடிகள் ஒரே வேகத்தில் சுழன்று கொண்டிருப்பதுபோலவும் ஒரே மாதிரி இயங்கிக் கொண்டிருப்பதுபோலவும் தோன்றும்.

ஆனால் காற்றாலைகள் குறித்து நன்றாகத் தெரிந்து வைத்திருப்பவர்கள், அவை காற்றினால் கட்டுப்படுத்தப்படுகின்றன என்பதையும், தேவைப்படும்போது அவை தம்முடைய திசையை மாற்றிக் கொள்ளும் என்பதையும் அறிவர்.

லாடம் அடிப்பவரின் கை, ஆயிரக்கணக்கான முறை சுத்தியலைக் கொண்டு மீண்டும் மீண்டும் அடிப்பதன் மூலம் பயிற்றுவிக்கப்படுகிறது. காற்று வேகமாக வீசும்போது, காற்றாலைகளின் காற்றாடிகளில் உள்ள விசிறிகளால் வேகமாகச் சுழல முடியும், காற்றாடிகள் சீராக இயங்குவதை உறுதி செய்ய முடியும்.

தான் எய்கின்ற அம்புகளில் பல தன்னுடைய இலக்கைத் தாண்டிச் செல்ல ஒரு வில்லாளன் அனுமதிக்கிறான். ஏனெனில், ஆயிரக்கணக்கான முறை மீண்டும் மீண்டும் நாணை இழுத்து அதில் அம்பு தொடுத்து எய்வதன் மூலமாகவும், தவறுகள் செய்ய பயப்படாமல் இருப்பதன் மூலமாகவும் மட்டுமே, வில், நாண், தோரணை மற்றும் இலக்குகளின் முக்கியத்துவத்தைத் தன்னால் கற்றுக் கொள்ள முடியும் என்பதை அவன் அறிந்திருக்கிறான்.

அவனுடைய உண்மையான நலன் விரும்பிகள் அவனைக் குறை கூற மாட்டார்கள். ஏனெனில், பயிற்சி அவனுக்குக் கட்டாயமாகத் தேவை என்பதையும், அவன் தன்னுடைய உள்ளுணர்வைக் கச்சிதப்படுத்துவதற்கான ஒரே வழி அதுதான் என்பதையும் அவர்கள் அறிவர்.

பிறகு ஒரு நாள், தான் செய்து கொண்டிருப்பதைப் பற்றி இனியும் சிந்திக்க வேண்டிய அவசியம் இல்லாத அக்கணம் மலரும். அக்கணத்திலிருந்து, அந்த வில்லாளன் தன்னுடைய வில்லாகவும் தன்னுடைய அம்பாகவும் தன்னுடைய இலக்காகவும் ஆகிறான்.

அம்பை எய்த பிறகு, அது தன் இலக்கை நோக்கிப் பயணிப்பதை கவனிப்பதைத் தவிர ஒரு வில்லாளனால் வேறு எதுவும் செய்ய முடியாது. அக்கணத்திலிருந்து, அம்பை எய்வதற்குத் தேவைப்பட்ட விசை இனியும் அங்கு நீடிப்பதற்கு எந்தக் காரணமும் இருப்பதில்லை.

எனவே, அந்த வில்லாளன் தன் அம்பின் பயணத்தின்மீது தன் பார்வையை நிலைப்படுத்துகிறான், அவனுடைய இதயம் அமைதியடைகிறது, அவன் புன்னகைக்கிறான்.

நாணை விடுவித்தக் கை மீண்டும் பின்னால் வருகிறது, வில்லைப் பிடித்திருக்கின்ற கை முன்னால் செல்கிறது. இதன் விளைவாக, அந்த வில்லாளன் தன் கைகளை அகலமாக விரித்து, தன்னுடைய நலன் விரும்பிகளின் பார்வையையும் எதிரிகளின் பார்வையையும் ஒருசேர எதிர்கொள்ளும் கட்டாயத்திற்கு ஆளாகிறான். இதன் ஊடாக, அவனுடைய நெஞ்சு தற்காப்பின்றி வெளிப்படுகிறது.

அவன் போதிய அளவு பயிற்சி செய்திருந்தால், தன் உள்ளுணர்வைச் செம்மையாக வளர்த்தெடுத்திருந்தால், அம்பை எய்வதற்கான ஒட்டுமொத்தச் செயல்முறை நெடுகிலும் அவன் நேர்த்தியாகவும் ஒருமித்த கவனத்தோடும் செயல்பட்டிருந்தால், அக்கணத்தில் அவன் பிரபஞ்சத்தின் இருத்தலை உணர்ந்திருப்பான், தன்னுடைய செயல்நடவடிக்கை நியாயமானதாகவும் தகுதியுடையதாகவும் இருந்ததை அவன் கண்டிருப்பான்.

இரண்டு கைகளும் தயார் நிலையில் இருப்பதையும், சுவாசம் துல்லியமாக இருப்பதையும், கண்கள் இலக்கின்மீது குவிந்திருப்பதையும் உத்தி உறுதி செய்கிறது. அம்பை விடுவிக்கின்ற கணம் கச்சிதமாக இருப்பதை உள்ளுணர்வு உறுதி செய்கிறது.

தன் கைகளை விரித்து வைத்துக் கொண்டு, பறந்து சென்று கொண்டிருக்கின்ற அம்பின்மீது தன் பார்வையை நிலைப்படுத்தியபடி நிற்கின்ற ஒரு வில்லாளனைக் கடந்து செல்கின்ற எவரொருவரும் அவனைப் பார்க்கும்போது, அங்கு எதுவுமே நிகழ்ந்து கொண்டிருக்கவில்லை என்றுதான் நினைப்பர். ஆனால், அவனுடைய நலன் விரும்பிகள் மட்டும், அம்பை எய்திருந்தவனின் மனம் வேறொரு பரிமாணத்திற்கு மாறியுள்ளதை அறிந்திருப்பர். அந்த மனம் இப்போது ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்துடன் தன்னை இணைத்துக் கொண்டுள்ளது.

அந்த மனம், அந்தத் தாக்குதல் தொடர்பான நேர்மறையான விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொண்டு, தவறுகளைத் திருத்திக் கொண்டு, அதன் நல்ல பண்புநலன்களை ஏற்றுக் கொண்டு, அந்த அம்பு தன் இலக்கைத் தாக்கும்போது அந்த இலக்கு எவ்வாறு எதிர்வினையாற்றுகிறது என்பதைப் பார்க்கக் காத்துக் கொண்டு தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக்கும்.

ஒரு வில்லாளன் நாணை இழுக்கும்போது, தன்னுடைய வில்லில் ஒட்டுமொத்த உலகத்தையுமே அவனால் பார்க்க முடியும்.

பறந்து செல்கின்ற அம்பின்மீது அவன் தன் பார்வையை நிலைப்படுத்தும்போது, அந்த உலகம் அவனை நெருங்கி வருகிறது, அவனை வருடித் தழுவுகிறது, ஒரு கடமையைக் கச்சிதமாக நிறைவேற்றிய ஓர் உணர்வை அவனுக்குக் கொடுக்கிறது.

ஒவ்வோர் அம்பும் வெவ்வேறு விதமாகப் பறந்து செல்கிறது. நீ ஆயிரம் அம்புகளை எய்தால், அவை ஒவ்வொன்றும் முற்றிலும் வேறுபட்ட ஓர் ஏவுபாதையில் பயணிக்கும்: அதுதான் வில்லின் மார்க்கம்.

வில்லின் மார்க்கத்தின் விதிமுறைகள் அனைத்தையும் மறந்துவிட்டு முழுக்க முழுக்கத் தன் உள்ளுணர்வின் அடிப்படையில் இயங்கத் தொடங்கும்போதுதான் ஒரு வில்லாளன் கற்றுக் கொள்கிறான். ஆனால், அந்த விதிமுறைகளை அவன் மறப்பதற்கு, முதலில் அவன் அவற்றை அறிந்திருக்க வேண்டும், அவற்றை மதிக்க வேண்டும்.

அவன் அந்த நிலையை அடையும்போது, கற்றுக் கொள்ள அவனுக்கு உதவிய கருவிகள்கூட அவனுக்குத் தேவைப்படாது. அவனுக்கு இனியும் வில்லோ அல்லது அம்புகளோ அல்லது இலக்கோ தேவைப்படாது. ஏனெனில், எது முதலில் அவனை அந்தப் பாதைக்கு அழைத்து வந்திருந்ததோ, அதைவிட அந்தப் பாதை அதிக முக்கியமானதாக இருக்கிறது.

இதே விதத்தில், வாசிக்கக் கற்றுக் கொள்கின்ற ஒரு மாணவன், ஒரு கட்டத்தில், தனித்தனி எழுத்துகளிலிருந்து தன்னை விடுத்துக் கொண்டு, அவற்றிலிருந்து சொற்களை உருவாக்கத் தொடங்குகிறான்.

ஆனால் அச்சொற்கள் அனைத்தும் எந்த இடைவெளியும் இன்றி எழுதப்பட்டிருந்தால், அவற்றுக்கு எந்த அர்த்தமும் இருக்காது, அவற்றைப் புரிந்து கொள்வதும் மிகவும் கடினமாக இருக்கும். எனவே, சொற்களுக்கு இடையே இடைவெளிகள் இருந்தாக வேண்டும்.

ஒரு செயல்நடவடிக்கைக்கும் அடுத்தச் செயல்நடவடிக்கைக்கும் இடையே, ஒரு வில்லாளன், தான் செய்துள்ள அனைத்தையும் நினைவுகூர்கிறான்; அவன் தன்னுடைய நலன் விரும்பிகளோடு பேசுகிறான்; ஓய்வெடுக்கிறான்; தான் உயிருடன் இருப்பது குறித்து மனநிறைவு கொள்கிறான்.

வில்லின் மார்க்கம்தான் மகிழ்ச்சி மற்றும் உற்சாகத்தின் வழி; அதுதான் கச்சிதம் மற்றும் தவறுகளின் வழி; அதுவே உத்தி மற்றும் உள்ளுணர்வின் வழி.

"ஆனால் நீ உன்னுடைய அம்புகளைத் தொடர்ந்து எய்து கொண்டிருந்தால் மட்டுமே இதை உன்னால் கற்றுக் கொள்ள முடியும்."

தெட்சுயா பேசி முடித்தபோது அவர்கள் அவருடைய தச்சுப் பட்டறைக்கு வந்து சேர்ந்திருந்தனர்.

“இவ்வளவு நேரமும் எனக்குத் துணையாக என்னோடு வந்ததற்கு நன்றி,” என்று அவர் அச்சிறுவனிடம் கூறினார்.

ஆனால் அச்சிறுவன் அந்த இடத்தைவிட்டு அகலவில்லை.

“நான் சரியான காரியத்தைத்தான் செய்து கொண்டிருக்கிறேன் என்பதை நான் எவ்வாறு அறிவேன்? என் கண்கள் ஒருமித்த கவனம் செலுத்திக் கொண்டிருக்கின்றன என்பதையும், என் தோரணை நேர்த்தியாக இருக்கிறது என்பதையும், நான் என் வில்லைச் சரியாகப் பிடித்திருக்கிறேன் என்பதையும் எவ்வாறு நான் உறுதியாகத் தெரிந்து கொள்வது?”

“ஒரு கச்சிதமான ஆசான் எப்போதும் உனக்கு ஆதரவாக உன் பக்கத்தில் இருப்பதாக உன் மனத்தில் காட்சிப்படுத்திக் கொள். அவரை மதித்துப் போற்றவும் அவருடைய போதனைகளை கௌரவப்படுத்தவும் உன்னால் முடிந்த அனைத்தையும் செய். ‘கடவுள்’ என்று பலராலும், ‘திறமை’ என்று மற்றவர்களாலும் அழைக்கப்படுகின்ற அந்த ஆசான், எப்போதும் நம்மைக் கண்காணித்துக் கொண்டே இருக்கிறார்.

“அவர் சிறப்பானவற்றுக்குத் தகுதியானவர்.

“நீ உன்னுடைய நலன் விரும்பிகளையும் நினைவில் வைத்துக் கொள். நீ அவர்களை ஆதரிக்க வேண்டும். ஏனெனில், உனக்கு உதவி தேவைப்படுகின்ற நேரத்தில் அவர்கள் உனக்கு உதவுவர். கருணை எனும் பரிசை உன்னிடம் வளர்த்துக் கொள்ள முயற்சி செய். உன் இதயத்தில் எப்போதும் அமைதி தவழ அப்பரிசு உனக்கு உதவும். ஆனால், எல்லாவற்றுக்கும் மேலாக, நான் உன்னிடம் கூறியுள்ளவை உனக்கு உத்வேகமூட்டக்கூடும் என்றாலும், அவற்றை நீ சுயமாக அனுபவித்தால் மட்டுமே அவை அர்த்தம் வாய்ந்தவையாக இருக்கும் என்பதை நீ ஒருபோதும் மறந்துவிடாதே.”

பிறகு அச்சிறுவனிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளும் நோக்கத்தில் தெட்சுயா தன் கையை அவனை நோக்கி நீட்டினார். ஆனால் அச்சிறுவன் அவரை விடுவதாக இல்லை:

“இன்னொரு விஷயம்: வில்வித்தையை நீங்கள் எப்படிக் கற்றுக்

கொண்டீர்கள்?”

தன் கதையைப் பகிர்ந்து கொள்வது மதிப்பு வாய்ந்ததுதானா என்று தெட்சுயா ஒரு கணம் யோசித்தார். பிறகு, அன்று ஒரு சிறப்பான நாளாக இருந்திருந்ததால், அவர் தன் தச்சுப் பட்டறையின் கதவைத் திறந்தவாறு இவ்வாறு கூறினார்:

“நான் இப்போது தேநீர் தயாரிக்கப் போகிறேன். நான் என் கதையையும் உன்னிடம் கூறப் போகிறேன். ஆனால், அந்த அந்நியனிடம் நான் எந்த வாக்குறுதியைக் கேட்டேனோ, அதே வாக்குறுதியை நீயும் எனக்கு வழங்க வேண்டும். நான் ஒரு கைதேர்ந்த வில்லாளன் என்பதை நீ யாரிடமும் கூறக்கூடாது.”

அவர் தன் பட்டறைக்குள் நுழைந்து விளக்கைப் போட்டுவிட்டு, தன் வில்லை மீண்டும் அந்த நீண்ட தோலைக் கொண்டுச் சுற்றி, பிறருடைய பார்வையில் படாதவாறு அதை ஓரிடத்தில் வைத்தார். தப்பித் தவறி யாராவது அதைப் பார்த்துவிட்டால்கூட, அது ஏதோ ஒரு மூங்கில் கம்பு என்று நினைத்துக் கொள்வார்கள். தெட்சுயா சமையலறைக்குள் சென்று, தேநீர் தயாரித்துக் கொண்டு வந்து அச்சிறுவனுடன் அமர்ந்து தன் கதையைக் கூறலானார்.

“முன்பு ஒரு சமயம், ஒரு குறிப்பிட்டப் பகுதியில் வசித்து வந்த ஒரு பெரிய பிரபுவிடம் நான் வேலை பார்த்து வந்தேன். அவருடைய குதிரை லாயத்தை நிர்வகிக்கும் பொறுப்பு எனக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. என் முதலாளி எப்போதும் எங்கேனும் பயணம் செய்து கொண்டே இருந்ததால், எனக்கு ஏகப்பட்ட ஓய்வு நேரம் கிடைத்தது. எனவே, வாழ்வதற்கான உண்மையான காரணம் என்று நான் கருதிய இரண்டு விஷயங்களில் நான் என் நேரம் முழுவதையும் செலவிட்டேன். மதுவும் மங்கையரும்தான் அவை.

“ஒரு முறை, நான் பல இரவுகள் தூங்காமல் இருந்ததைத் தொடர்ந்து, ஊரைவிட்டு மிகவும் தள்ளியிருந்த, ஆள் அரவமற்ற ஓரிடத்தில் நான் மயங்கி விழுந்துவிட்டேன். நான் நிச்சயமாக இறந்துவிடுவேன் என்று நினைத்து நான் முற்றிலுமாக நம்பிக்கை இழந்தேன். ஆனால், அவ்வழியாகத் தற்செயலாக வந்த ஒருவர் எனக்கு உதவி செய்து, என்னைத் தன்னுடைய வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அதற்கு முன்பு அவரை நான் ஒருபோதும் பார்த்ததில்லை. அவருடைய வீடு இங்கிருந்து வெகு தூரத்தில் இருக்கிறது. அவர் பல மாதங்கள் என்னைக் கண்ணும்

கருத்துமாக கவனித்துப் பராமரித்து என் உடல்நலத்தை மீட்டெடுத்தார். நான் அவருடன் தங்கியிருந்தபோது, தினமும் காலையில் அவர் தன் வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு எங்கோ புறப்பட்டுச் சென்றதை நான் கவனித்து வந்தேன்.

“நான் ஓரளவுக்குத் தேறியதும், எனக்கு வில்வித்தையைக் கற்றுத் தருமாறு நான் அவரிடம் கேட்டேன். குதிரைகளை கவனித்துக் கொள்வதைவிட அது சுவாரசியமானதாக இருந்ததாக எனக்குத் தோன்றியது. நான் மரணத்தைத் தொட்டுவிட்டு வந்திருந்ததாகவும், இப்போதும் அதை விரட்டியடிக்கின்ற நிலையில் நான் இருக்கவில்லை என்றும் அவர் என்னிடம் கூறினார். நான் நெடுங்காலமாக என் உடலுக்குப் பெரும் தீங்கு விளைவித்து வந்திருந்ததால், மரணம் வெறும் இரண்டடி தூரத்தில்தான் இருந்தது என்று அவர் கூறினார்.

“நான் வில்வித்தையைக் கற்றுக் கொள்ள விரும்பினால், சாவு என்னைத் தொடாமல் இருப்பதற்காக மட்டுமே அது இருக்கும் என்று அவர் கூறினார். கடலுக்கு அப்பால் வெகு தொலைவில் வாழ்ந்து வந்த ஒருவர் அவருக்கு ஒரு விஷயத்தைக் கற்றுக் கொடுத்திருந்தார்: ‘சாவின் விளிம்புக்கு இட்டுச் சென்ற பாதையை சில காலம் தவிர்ப்பது சாத்தியம்தான்.’ ஆனால் என் விஷயத்தில், நான் அந்தப் படுகுழியை ஒட்டியே நடந்து சென்று கொண்டிருந்தேன் என்பதையும், நான் எக்கணத்திலும் அதற்குள் விழக்கூடும் என்பதையும் என் எஞ்சிய வாழ்நாள் முழுவதும் நான் அறிந்திருக்க வேண்டும் என்றும் அவர் கூறினார்.

“பிறகு வில்லின் மார்க்கத்தை அவர் எனக்குக் கற்றுக் கொடுத்தார். தன்னுடைய நலன் விரும்பிகளிடம் அவர் என்னை அறிமுகப்படுத்தினார். வில்வித்தைப் போட்டிகளில் அவர் என்னைப் பங்கேற்க வைத்தார். விரைவில் என் புகழ் அப்பகுதி முழுவதும் பரவியது.

“நான் போதுமான அளவு கற்றுக் கொண்டதை அவர் அறிந்து கொண்டவுடன், அவர் என்னுடைய அம்புகளையும் என் இலக்கையும் என்னிடமிருந்து எடுத்துக் கொண்டு, என் வில்லை மட்டும் ஒரு நினைவுப் பொருளாக என்னிடம் கொடுத்தார். என்னை உண்மையிலேயே உற்சாக வெள்ளத்தில் மூழ்கடித்த ஏதோ ஒரு வேலையைச் செய்வதற்குத் தன்னுடைய போதனைகளைப் பயன்படுத்திக் கொள்ளும்படி அவர் என்னிடம் கூறினார்.

“தச்சு வேலைதான் எனக்கு மிகவும் பிடித்திருந்ததாக நான் அவரிடம் கூறினேன். அவர் என்னை ஆசீர்வதித்துவிட்டு, தலைசிறந்த வில்லாளன் என்ற புகழ் என்னை ஒட்டுமொத்தமாக அழித்துவிடுவதற்கு முன்பாகவோ அல்லது அது மீண்டும் என்னுடைய பழைய வாழ்க்கைக்குள் என்னைத் தள்ளுவதற்கு முன்பாகவோ அங்கிருந்து புறப்பட்டுச் சென்று, எனக்கு மிகவும் பிடித்தமான வேலைக்கு என்னை அர்ப்பணித்துக் கொள்ளும்படி என்னிடம் கூறினார்.

“அதன் பிறகு, ஒவ்வொரு கணமும், என்னுடைய சுயபச்சாதாபத்திற்கும் என்னுடைய மோசமான பழக்கங்களுக்கும் எதிரான ஒரு போராட்டமாகவே இருந்து வருகிறது. நானாக விரும்பித் தேர்ந்தெடுத்த வேலையை நான் அன்போடு செய்வதற்கும், ஒருபோதும் நிகழ்கணத்தைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்காமல் இருப்பதற்கும், நான் தொடர்ந்து ஒருமித்த கவனத்துடனும் அமைதியாகவும் இருக்க வேண்டியுள்ளது. ஏனெனில், மரணம் இப்போதும் அருகேதான் இருக்கிறது, நான் இன்னும் அந்தப் படுகுழியை ஒட்டித்தான் நடந்து கொண்டிருக்கிறேன்.”

மரணம் எல்லா உயிரினங்களுக்கும் எப்போதும் மிக அருகேதான் இருக்கிறது என்று தெட்சுயா அச்சிறுவனிடம் கூறவில்லை. அவன் இன்னும் இளம்பருவத்தினனாக இருந்ததால், இப்படிப்பட்ட விஷயங்கள் குறித்துச் சிந்திக்க வேண்டிய அவசியம் இப்போது அவனுக்கு இல்லை.

அதேபோல, எந்தவொரு மனித நடவடிக்கையிலும் வில்லின் மார்க்கம் இருக்கிறது என்பதையும் தெட்சுயா அவனிடம் கூறவில்லை.

பல ஆண்டுகளுக்கு முன்னால் அவர் வேறொருவரால் ஆசீர்வதிக்கப்பட்டு இருந்ததைப்போலவே, அவர் இப்போது அச்சிறுவனை ஆசீர்வதித்துவிட்டு, அங்கிருந்து புறப்படும்படி அவனிடம் கூறினார். ஏனெனில், அன்று அவர் ஏகப்பட்ட வேலைகளைச் செய்து களைத்துப் போயிருந்ததால், அவர் சிறிது நேரம் தூங்கி ஓய்வெடுக்க வேண்டியிருந்தது.

# நன்றியுரை

‘ஜென் அன்ட் த ஆர்ட் ஆஃப் ஆர்ச்சரி’ (டெர்பி எடிசன்ஸ், 2016) நூலை எழுதிய ஓய்கன் விக்டர் ஹெரிகெல்லுக்கு நன்றி.

நலன் விரும்பிகளின் பண்புநலன்களை விவரித்ததற்காக, சமூகத் தொழில்முனைவோருக்கான ஷ்வாப் அறக்கட்டளையின் இயக்குநரான பமீலா ஹார்ட்டிகனுக்கு நன்றி.

ஒனுமா சன்னுடன் சேர்ந்து ‘கியோடோ’ என்ற புத்தகத்தை எழுதியதற்காக டேன் மற்றும் ஜேக்கி டெபுராஸ்பெரோவுக்கு நன்றி.

மரணத்திற்கும் ‘நேகுவால்’ எலியஸுக்கும் இடையேயான வாக்குவாதத்தைப் பற்றிய விவரிப்பிற்காக கார்லோஸ் காஸ்டனேடாவுக்கு நன்றி.

# நூலாசிரியர்

## பாலோ கொயலோ

பாலோ கொயலோவின் சொந்த வாழ்க்கையே அவருடைய நூல்களுக்கான உத்வேகமாக இருந்து வருகிறது. அவர் சாவை முத்தமிட்டுள்ளார், பைத்தியக்கார நிலையை அடைவதிலிருந்து தப்பித்துள்ளார், போதைப் பொருட்களைப் பயன்படுத்தி அவற்றிலிருந்து மீண்டிருக்கிறார், சித்திரவதைகளைப் பொறுத்துக் கொண்டிருக்கிறார், ரசவாதத்தையும் மாயாஜாலத்தையும் சுவைத்திருக்கிறார், தத்துவங்கள் குறித்தும் மதங்கள் குறித்தும் ஆழமாகக் கற்றறிந்திருக்கிறார், பெரும் தாகத்தோடு நூல்களைப் படித்திருக்கிறார், மத நம்பிக்கையை இழந்து மீண்டும் அதை சுவீகரித்திருக்கிறார், அன்பின் இன்ப துன்பங்களை அனுபவித்திருக்கிறார். இவ்வுலகில் தனக்கான இடம் எது என்ற தேடலின் ஊடாக, எல்லோரும் எதிர்கொள்கின்ற போராட்டங்களுக்கான விடைகளை இவர் கண்டறிந்துள்ளார். நம்முடைய சொந்தத் தலைவிதியைக் கண்டறிந்து கொள்ளத் தேவையான வலிமை நம் ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கிறது என்று அவர் நம்புகிறார்.

பாலோ கொயலோவின் நூல்கள் 83 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவை 170க்கும் அதிகமான நாடுகளில் சுமார் 32 கோடிப் பிரதிகள் விற்பனையாகியுள்ளன. 1998 ஆம் ஆண்டு வெளியான ரசவாதி என்ற புதினம் உலகெங்கும் 8.5 கோடிப் பிரதிகள் விற்பனையாகியுள்ளது. மலாலா யூசுப்ஸாயில் தொடங்கி ஃபாரெல் வில்லியம்ஸ்வரை பலதரப்பட்ட மக்களுக்கும் ரசவாதி நூல் உத்வேகமூட்டியுள்ளது.

'பிரேசிலியன் அகாடமி ஆஃப் லெட்டர்ஸ்' அமைப்பின் உறுப்பினர்களில் ஒருவரான பாலோ கொயலோ, பிரான்ஸ் நாட்டின் மிக உயர்ந்த விருதான செவாலியே விருது பெற்றவர். 2007 ஆம் ஆண்டில் ஐக்கிய நாடுகள் சபையின் அமைதித் தூதுவராக அவர் நியமிக்கப்பட்டார்.

# ஓவியர்

## கிறிஸ்டாஃப் நீமன்

ஜெர்மனியில் உள்ள வைப்லிங்கென் நகரில் பிறந்த கிறிஸ்டாஃப் நீமன் ஓர் ஓவியர், நூலாசிரியர் மற்றும் அனிமேட்டர் ஆவார். 'த நியூ யார்க்கர்', 'நேஷனல் ஜியோகிராஃபிக்', 'த நியூ யார்க் டைம்ஸ் பத்திரிகை' ஆகியவற்றின் அட்டைகளை அவருடைய படைப்புகள் அடிக்கடி அலங்கரிக்கின்றன. கிறிஸ்டாஃபின் படைப்புகள் பல அருங்காட்சியகங்களில் இடம் பெற்றுள்ளன. 'த நியூ யார்க்கர்' பத்திரிகையின் முதல் 'ஆக்மென்டட் ரியாலிட்டி' அட்டையை அவர் உருவாக்கினார். 2010 ஆம் ஆண்டில், 'ஆர்ட் டைரக்டர்ஸ் கிளப்' அமைப்பின் சாதனையாளர்கள் பட்டியலில் அவருடைய பெயர் சேர்க்கப்பட்டது. 'சன்டே ஸ்கெட்சிங்' (2016), 'வேர்ட்ஸ்' (2016), 'ஸுவனீர்' (2017) உட்பட அவர் பல நூல்களை எழுதியுள்ளார். சமீபத்தில் அவர் எழுதிய 'ஹோப்ஸ் அன்ட் டிரீம்ஸ்' புத்தகம், லாஸ் ஏஞ்சலீஸ் நகரில் உள்ள ஓவியரைப் பார்ப்பதற்கு மேற்கொள்ளப்படுகின்ற ஒரு பயணத்தைப் பற்றியதாகும். கிறிஸ்டாஃப் தன் குடும்பத்துடன் பெர்லின் நகரில் வசித்து வருகிறார்.

# மொழிபெயர்ப்பாளர்

## நாகலட்சுமி சண்முகம்

நாகலட்சுமி சண்முகம் ஒரு மிகச் சிறந்த ஊக்குவிப்புப் பேச்சாளர். அமெரிக்காவின் தலைசிறந்த பேச்சாளர்களில் ஒருவரும், 'சிக்கன் சூப் ஃபார் த சோல்' புத்தக வரிசையை உருவாக்கியவருமான ஜாக் கேன்ஃபீல்டின் 'வெற்றிக் கொள்கைகள்' பயிலரங்கை நடத்துவதற்கு அவரிடம் நேரடியாகப் பயிற்சி பெற்றவர் இவர்.

இவர் ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளரும்கூட. கடந்த பத்து ஆண்டுகளில் எண்பதுக்கும் மேற்பட்ட நூல்கள் இவருடைய மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. இவருடைய மொழிபெயர்ப்புக்குக் கிடைத்துள்ள அங்கீகாரங்களில் 2014ல் திருப்பூர் தமிழ்ச் சங்கம் அளித்த 'தமிழ் மொழிபெயர்ப்புத் துறைக்கான சிறப்பு விருதும்,' இவர் மொழிபெயர்த்த 'இறுதிச் சொற்பொழிவு' நூலுக்கு 2014ல் வழங்கப்பட்ட 'நல்லி திசை எட்டும் மொழியாக்க விருதும்' அடங்கும். 2017 மே மாதம் தமிழக அரசு சிறந்த மொழிபெயர்ப்பாளருக்கான விருதை நாகலட்சுமிக்கு வழங்கி கௌரவித்துள்ளது.

தமிழ் நாடகத் துறையின் முன்னோடி மேதைகளான டி.கே.எஸ். சகோதரர்களில் ஒருவரான திரு. முத்துசாமி அவர்களின் பேத்திகளில் ஒருவர் இவர். இவர் தற்போது தன் கணவருடனும் தன் குழந்தைகள் இருவருடனும் மும்பையில் வசித்து வருகிறார்.